24th April 1962]

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** இப்பொழுது மனுக்கள் வந்து கொண்டிருக்கின்றன. மனுக்களைப்பற்றி என்ன செய்ய வேண்டுமென்பதை யோசித்து நிர்ணயிக்க வேண்டியதாக இருக்கிறது. முதலில் இவைகளை பரிசீலனை செய்து பின்னால் விதிகளை எவ்வாறு மாற்றவேண்டுமென்பது யோசிக்கப்படும்.

*2 *Q*.—**SRIMATHI T. N. ANANDANAYAKI** (on behalf of **SRIMATHI RAJATHI KUNJITHAPATHAM**): கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வயோதிக ஆண்கள், பெண்களுக்கு பென்ஷன் கொடுக்கும் திட்டம் எப்போதிலிருந்து அமுலுக்கு வருகிறது?

(இ) பென்ஷனாக கொடுக்கும் தொகை எவ்வளவு?

(உ) பென்ஷன் பெறுபவருக்கு வரையறுக்கப்பட்ட வயது என்ன?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** (அ) 1st April 1962.

(இ) Rs. 20 per mensem for each destitute.

(உ) Sixty-five years and over. For destitutes who are incapacitated to earn a living due to blindness, leprosy, insanity, paralysis or loss of limb, the age limit is 60.

**SRI M. KARUNANITHI :** முதியோர்களுக்கு உதவி அளிக்கும் விஷயமாக விண்ணப்பங்கள் வந்து கொண்டிருக்கின்றன என்று சொல்லப்படுகிறது. அந்த விண்ணப்பங்களை சிபாரிசு செய்ய வேண்டுமென்றால் அவற்றில் யார் யார் கையெழுத்து வேண்டும் என்பதைப்பற்றிய விளக்கம் அறிவிக்க முடியுமா?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** அதைப்பற்றி தனிக் கேள்வி வேண்டும்.

**SRI M. S. MANI :** பெற்ற பிள்ளைகளால் வீட்டை விட்டு விரட்டப்பட்ட முதியோர்களுக்கு இந்த திட்டத்தை விஸ்தரித்துக் கொடுக்கப்படுமா?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** முதலில் மனுக்கள் வரட்டும், அதன் பிறகு அதைப்பற்றி எப்படி விதிகளை மாற்ற வேண்டும் என்பதைப்பற்றியெல்லாம் யோசிக்கலாம்.

**SRI K. A. MATHIALAGAN :** Will the Government kindly consider reducing the age limit to 55 as it is the time when people retire from public services and become unable to do normal work?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** நான் முன்பே குறிப்பிட்டேன். இப்பொழுது சில விதிகள் நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றன. இவைகள் எப்படி நிறைவேற்றப்படுகிறது என்பதைப் பார்த்த பிறகுதான் விதிகளை எப்படி மாற்றி அமைக்க வேண்டுமோ அப்படியெல்லாம் மாற்றி அமைக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும்.